உ

திருவருட்பெருஞ்சோதித் தெய்வமே துணை.

# ஞானமிர்த சாரம்.

என்னும்

## ஞானரசக் கீர்த்தனை.



(1) இராகம் அம்ஸத்வனி தாளம் ஆதி.

பல்லவி.

ஆதார முனையன்றியுண்டோ நல் [ஆதா]
அருவாகனலிங்கினேஸ்வர [ஆதா]

அநுபல்லவி.

பாதாரவிந்தா தரது வைதம்
பாங்குடன் பணிந்தே னனவரதம்
பரமசோபிதம்—பயிலொணாவிதம்
கிரமசாஸ்வதம்—கிளருமும்மதம்
கருணை மோதகம்—கலந்த சாதகம்
கௌணவாசகம்—கடந்த தேசகம் [ஆதா]

சரணம்.

தயாகங்கண சரத விலாசம்
சர்வபாப சங்கார விசேஷம்
நியாயந்தவி ராதவுலாசம்
நித்ய மங்கள நிரந்தர வாசம
தியான மந்திர தேவ சொரூபம்
சிறந்த அன்பர்கள் தெளிந்த தீபம்
பயன்றரும் குரு பரம சுபாவம்
பரி பூர ணானந்தப் பிரதாபம் [ஆதா]

## (2) இராகம் சுத்த பங்களா தாளம் ஆதி.

பல்லவி.

தருவாய் நல்வரம் தாயே வாணி
தருண மீதுனதடி சார்ந்தேன் மெய்ப்பேணித் [தரு]

அநுபல்லவி.

குருவா யெனது குறைதவிர்த்திடவே
வருவாய் குறுகிய மதிவினை கெடவே [தரு]

சரணம்.

அன்ன வாகனமிசை யமர்ந்திடுந் தாயே
அருங்கல்வியினிலெழுமறிவெனுந் தீயே
பன்னருங்கடைக் கண் பார்த்தருள்வாயே
பரிபூரணானந்த பாக்கியநீயே [தரு]

---

## (3) இராகம் தோடி தாளம் ஆதி.

பல்லவி.

மாந்தர் பேணு முபசாந்த ஞானமருள்வாய்
மயிலேறி வருமுருகா [மாந்]

அநுபல்லவி.

வேந்தரா தியரும் வீழ்ந்து போவர் கொடி
யசைந்தவே தியர்க ளோர்ந்து சார்ந்தபடி [மாந்]

சரணம்.

மா யைமறைத் தொளி நிறைத்திடுவாய்—மயலகல
மா மதியளித்திட ரழித்திடுவாய்—மருவுதன
மாதர் பூமிசை—மாற்று முன் பந்தமே
போத வேத பரி பூரணானந்தமே [மாந்]

## (4) இராகம் கதனகுதூகலம் தாளம் ஆதி.

### பல்லவி.

சரணாகதி யுனையன்றி வேறு
தரணியிலேது தடுத்தாளிப்போது [சர]

### அநுபல்லவி.

கருணாகரா—கனக மயூரா
காங்கேய மைந்தா—கார்த்திகேய கந்தா [சர]

### சரணம்.

கண்கண்ட சரதா கலியுக வரதா
காரண விநோதா—கமல பொற்பாதா
நன் பரி பூரணா—நந்தன் சொல்லாரணா
நாம வேற்றாரணா—நாட்டிய வாரணா [சர]

---

## (5) இராகம் கல்யாணி தாளம் ஆதி.

### கண்ணிகள்.

கருணா கரனே கதியருள் பரனே
காமத கனரூப கர சங்கரனே
தருண மிருதுவரந் தருவா யரனே
தாளிணை பணிந்—தோங் கங்காதரனே

அமரா பதியா ளரசரி யயனே
ஆகிய வருமறி யாத நயனே
தமருனை விட வித் தரையிலெவரே
சகல கேவல நிலை தந்தவரே

திரிபுர மதனைத் தீயெழ எரித்தாய்
தேவ கங்கையை யருஞ் சிரத்தில் தரி
பரி பூரணநந்த பரம்குருவே
பாக்கியம் பழுத் தொளிர் பைந்தரு

## (6) இராகம் இந்துஸ்தான் காபி தாளம் ஆதி.

பல்லவி.

சரணம்—அருள்—தரவிது நதி விடை
  தனிலமர்ந்துடன் வருவாய் தாளிணை மலர் [சர]

அநுபல்லவி.

மரண—மறு ஜனன மெனும் பிணியை
  மாற்றி யிங்கருள் புரிவாய்—மலரடிகள் [சர]

சரணம்.

அரிபூ வயனமராருக் கரிய நல்லர சிவ
  பரம் பொருளே—அனு தினமும்
  பரி பூரணாநந்த பூஜித
  பரம சிற் சுக வருளே—பதமலர்கள் [சர]

---

## (7) இராகம் பியாக் தாளம் ரூபகம்.

பல்லவி.

ஆதரித்தாள் கிருபாகரா—அன்னை லக்ஷ்மி மனோகரா [ஆத]

அநுபல்லவி.

தீதறுக்கும் குண சேகரா—தேசோ மயாநந்த சாகரா [ஆத]

சரணம்.

ஆனையை ரக்ஷித்த மூலனே—ஆபத்துக்குதவும சீலனே
மானினி கோசலை பாலனே மாயா மகேந்திர ஜாலனே [ஆத]

ஆஞ்சநேயன் [illegible] ர்த்தவா—அன்னை ஜானகிகை கோர்த்தவா
பாஞ்சாலி மான[illegible]க் காக்கவா-பார்த்தன்ரதத்திலுக்கேத்தவா[ஆ]

சத்திய பாமையின் காந்தனே—சாகச ருக்மணி பாந்தனே
நித்திய முத்தியே காந்தனே—நீளுந்து வாரகைவேந்தனே [ஆத]

மேவிய பத்தவதாரனே—வேண்டுமன் பர்க் குபகாரனே
பாவிய ருக்கதிதாரனே—பரி பூரணானந்த சாரனே [ஆத]

---

(8) இராகம் சஹானா தாளம் ஆதி.

பல்லவி.

மாயா தேவியே உன்றன் மஹிமை தெரியாது
மயங்குகின்றாரிங்கே—மக்கள் [மாயா]

அநுபல்லவி.

சாயா புருடனைப் போல்—தந்திரமாக வந்து
ஓயாமல் தோன்றுகின்ற உண்மைதனை மறந்து [மாயா]

சரணம்.

ஆனந்த வல்லி நீயே—அறிவும் பொருளுநீயே
வானந்தரையு நீயே—மந்த்ரம்
தானந் தவமு நீயே—சதுர் மறைமுடி நீயே
மானந் தயவு நீயே—மகத்து மனுவு நீயே [மாயா]

நல்ல சுழுத்தி நீயே—நனவுங் கனவு நீயே
இல்லாதவளு நீயே—இருப்பாம்
வல்லமையது நீயே—மறந்த நிலையு நீயே
சொல்லுங் குருவு நீயே—சுகப் படுவது நீயே [மாயா]

பேதா பேத மில்லாத—பேரின்பமது நீயே
ஆதார வெளி நீயே—அம்மா
மாதா பிதாவு நீயே—மனைவி மக்களு நீயே
போதாத்ம சுகபரி—பூரணானந்த நீயே [மாயா]

## (9) இராகம் முகாரி தாளம் ஆதி.

### பல்லவி.

பாழ்மனமே என்ன பாடு பட்டாய் ஐயோ [பாழ்]
பாடு பட்டாய்—அடி—யோடு கெட்டாய் [பாழ்]

### அநுபல்லவி.

ஊழ் மறவாது உழல்வது தீது
வாழ்வதிங் கேது மாபுவி மீது [பாழ்]

சொல்வது கேட்டு சுயநல மோட்டு
நல்வழி விட்டு ஞாபக நாட்டு [பாழ்]

நற்பரி பூர ஞாநந்த சார
விற்பன தீர மேவுவாய் சோரப் [பாழ்]

—— ——

## (10) இராகம் பியாகடை தாளம் ஆதி.

நெஞ்சமே கொஞ்சமே—னும்
நீதியுண்டோ வஞ்சமே—விய [நெஞ்]

### அநுபல்லவி.

சஞ்சலமே—மிஞ்சுகிறாய்—சத்
சங்கமோச மென்கிறா—யென் [நெஞ்]

### சரணம்.

புண்ணிய—மெண்ணி யெந்—தப்
போது வாழ்ந்தாய் மண்ணின்மீ—து [புண்]

கண்ணிய நீ—பண்ணுவது
காசை யேபி—சாசேபா—மும் [நெஞ்]

சொல் வழி—நில்விழி—நீர்
சேர விது நல்வழி—நான் [சொ]

புல்லர் மொழி—தள்ளிப் பரி
பூரணாநந்—தம் பெறு—வாய் [கெஞ்]

---

## (11) இராகம் தன்யாசி ஆதி தாளம்.

பல்லவி.

மனித ஜென்ம வர லாற றி யாது
மாய்கின்றாய் மனமே—நீ [மனி]

அநுபல்லவி.

புனித மிருந்த தேவ புண்ணிய ஜென்மம்
புகுவதும் பெரிதல்ல போகுமோ கன்மம் [மனி]

சரணம்.

துற் சங்க நிவிர்த்திச்சு பேச்சையு நீடும்
தூய விசாரணை தோன்றவுங் கூடும்
சற் சங்கத்தாலிச்சை தான் விழுந்தோடும்
சத்துவா பத்தியின் சார் பினைத்தேடும் [மனி]

நித்தியா நித்திய வஸ்து வி வேகம்
நீளிகபர பல போகவி ராகம்
சத்திய மான சமாதியின் யோகம்
சாருமு முமுக்ஷுத்வ சாதன போகம் [மனி]

பிரமா நந்த பிராக்ஞ சுபாவம்
பெற வரு முலகினில் பெரிது மிலாபம்
பரமாநந்தமாய்ப்—படரு மரூபம்
பரி பூரணாநந்த பாக்ய சொரூபம் [மனி]

## (12) இராகம் முகாரி தாளம் ரூபகம்.

### பல்லவி.

வாழத் தெரியாத நெஞ்சே
வார்த்தை யொன்று கேள் [வாழ]

### அநுபல்லவி.

வார்த்தை யொன்று கேள்—பர
மார்த்த மன்று சூழ் [வாழ]

### சரணம்.

கோழைத்தன மேவுகின்றாய்—குதித்து நிதம் தாவுகின்றாய்
பாழைத்தனம் பண்ணி மிகப பரிதபிக்கின்றாய்
பரிதபிக்கின்றாய்—பந்த—பாசம் வைக்கின்றாய் [வாழ]

### தொகையறு.

ஆபபினை வீணே யசைத் தசைத் தெடுத்தங்
ககப் படுங் குரங்கினைப் போலே
அருளாறது வைதக்க வட்டையிற் சொருகு
மத்வைத ஞானத்தை மேலே
வீழ்பபுற வசைத்துத் துயர்க் கடல் மூழ்கி
வெந்து யரடைவ தனாலே
விரும்பி யிங்குரைக்க விரைந்தன னதனை
வெறுப் பறவுணர் வையிக்காலே

### சரணம்.

வேத நெறியைப் பிடித்து—மேதினியிலே நடித்து
சாது பரி பூரணநந்—தனையடுப் பாயே
தனையடுப் பாயே—பவந்—தனை விடுப்பாயே [வாழ]

## (13) இராகம் ஆரபி தாளம் ஆதி.

பல்லவி.

ஒரு வார்த்தை கேள் மனமே இந்த
உலகத்தை யறியாது—பலகற்று மறிவேது [ஒரு]

அநுபல்லவி

குருவார்த்தை யிதெனக்—கொண்டு வந்திடுவாய்
கருவார்த்தையை யந்தக் கண முதல்விடுவாய் [ஒரு]

சரணம்.

இதுவரையிலு முன்னெடுத்த ஜென்மங்கள்
எண்ண முடியுமோ நீ இழைத்த கர்மங்கள்
பொதுவரை யெனமிகும் புத்திரர் பெண்கள்
பொருந்த மல்லவே ஐந்து புலன்களே கண்கள் [ஒரு]

இரண்டு கண்களினுலுமெதிருள்ள தொன்றே
இலகிட நோக்குவாய் இதமுற நின்றே
முரண்டது வைதவழி மூலம தென்றே
முதிர்ந்த அத்வைத நிலை முயலுவை யின்றே [ஒரு]

உலகந்து வைத மென ஓதுதல் கொண்டு
ஒரையமுங் கொள்ளாதே உண்மையைக் கண்டு
பலகுட நீர் மதிபல வெனவின்று
பரி பூரணானந்தப் பாலமு துண்டு [ஒரு]

---

## (14) இராகம் கல்யாணி தாளம் ஆதி.

கண்ணிகள்.

தானந்த மில்லாத ஆநந்த வல்லியாந்
தாயதோ பார் தெரிகின்றாள்—சச்சி
தானந்த நாயகன் சந்நிதியில் மகத்
தான நடம் புரிகின்றாள்

ஏற்றமுங் கெம்பீரத் தோற்றமும் வதனத்
தின் ஞெளியுங் கண்டயாரும்—பல

வேற்று ருவங்களைப் போற்று வரோமன
வேதனை யாவுமே தீரும்
கண்களிற் றாய்மையும் பெண்களின் நாணமும்
காட்டிச் செய்யுமந்த காசம்—மனப்
புண்களை மாற்றிடும் பண்கள் பல பாடிப்
பூத்தொளிர் கின்றாள் நன்னேசம்
நல்லவிதேக நாட்டெல்லையில் யாக
நடத்துவதற் குழும்போது—மனக்
கல்லைப் பிளந்தங்கு மெல்லக்கிளம்பிய
கற்பரசி யிந்த மாது
நித்தியானந்த மா முத்தி மலை மீது
நிற்கு நிலையி னைய்யாரம்—பல
புத்தி தெருண்டொரு சத்தியாயிற்றென்னும்
போதனை யாமுப சாரம்
சாயையைக் கண்டவர் மாயையென்பாரிவள்
தானே மனோன்மணி யாவாள்—துயர்
நோயும் பயமெனும் பேயுமாயஞ்ஞான
நோன்பினர் பால் நின்று நோவாள்
தேகத்தை யொன்றான ஏகத்துடன வைத்துச்
செப்பென்று ரைத்தவள் வேறோ—படர்
சோகத்தை யுந்தொடர் மோகத்தையுந் தந்து
சோதித்தது மிடை யூறோ.
பேதமென் றோதிய பேதநிலையிற்
பிறங்குகின்ற சுயஞ் சோதி—இவள்
பாத தெரிசன வேதியன்றோ ஜெகப்
பார் வையறு மறுபூதி
கண்டவர் விண்டிலர் விண்டவர் கண்டிலர்
கற்பகமா மரக்காக்ஷி—செய்த
பண்டைவினைக் கொருசண்டனும் நின்ற
பரப் பிரமா னந்த சாக்ஷி

## இராகம் செஞ்சுருட்டி தாளம் ஆதி.

பல்லவி.

சோதி தெரிசனம் பாரீர்—மனச்
சோகங்களைந்திங்கு வாரீர்—பாஞ் [சோதி]

அநுபல்லவி.

நீதி தவறாது—நின்று புவிமீது
சாதிகுலமாது—தள்ளியிது போது [சோதி]

சரணம்.

ஜீவ சுபாவம் பொல்லாது—அது
தேவ சபையில் நில்லாது—இந்த
ஆவலெனுங் கேட்டை அகற்றி ஞானப்பாட்டை
மேவியருள் வேட்டை—வெற்றிக்கொடிக் கோட்டைச் [சோதி]

மக்களெனப் பிறந்தீரே—சிறு
மாக்களிலுங் குறைந்தீரே—நீங்கள்
துக்கமென வந்த—துற்குணமென் முந்த
பக்குவமே தந்த—பரப் பிரமானந்த [சோதி]

---

## (16) இராகம் பைரவி தாளம் ரூபகம்.

பல்லவி.

ஞான மே சொரூபம்—அமல
ஞாபக சுபாவ லாப [ஞான]

அநுபல்லவி.

மோன வரம் பான வேத
மூதுரைப் பொருளா முத [ஞான]

சரணம்.

வாந்தியாக மதித்திவ் வுலக
    மாயை தானே மறைந்து விலக
சாந்தியாதி தவங்க ளிலக
    சாத்தியஞ் செய்தருள் திலக [ஞான]

தத்வ மசி வாக்கி யாதி
    சற்குரு நம் காதி லோதி
வித்வ ஜீவன் முத்தி நீதி
    விளைக்கு மாறு வளைக்குஞ் சோதி [ஞான]

மந்தர் மனது மடக்கு நேச
    மானுட னென வதிந்து பாச
பாத மகற்றும் பரி விராச
    பரப்ரம்மா நந்த விலாச [ஞான]

---

(17) இராகம் சக்கரவாகம் தாளம் ரூபகம்.

பல்லவி.

இது வோ பிரமாதம்
    எம் பெருமானுக் [இது]

அநுபல்லவி.

பொது வோங்கிய தில்லைப்
புகழ் நடராஜ மூர்த்தி
மது வோங்கி யருந்தி
மயங்கு கின்றாரோ நேர்த்தி இது]

எந்தச் சத்திய வருக்
கில்லை மனதே விடு
தந்தச் சச்சிதா நந்தம்
தானுக் குவார் மெய் யோடு [இது]

அண்ட மெல்லாம வரே
யாகியு மிந்த்ர ஜாலம்
கண்டாற் போ லொன்று மாகாக
கடவுளர்க் கேது காலம் [இது]

முத்தி வழி யறியா
மூர்க்கனை யான் திருக்கு
பக்தி வலையில் வீழும்
பரப்ரம்மா நந்த ருக்கு [இது]

---

## (18) இராகம் இந்துஸ்தான் காபி தாளம் ஆதி.

### பல்லவி.

சதமோ—ஜக—மதிலுள பல பொருள் களுமென
துறுதியுமே—தனிமனமே [சத]

### அநுபல்லவி.

மதமோ மாச்சரியமோ மோகமோ
மறுகுணமுழுவது மோ—மருவுவது [சத]

### சரணம்.

நில்லாய்—ஒரு—நிலையினில் நொடியு நன்
னெறி பிறழாவகையே—நிமலமென

பொல்லா யுனைப் போ லெவர் பாவியர்
பூவுலகதனிலுளார்—புகல்வதென்ன [சத]

பாரா—மிக பரசுகமெனு மிரு
பலனுநித்திய மலமே - பரிவு கொடு
ஆரா—யுனை—தழுவிய சொரூப மெய்யறிவெனு
முயர் பொருளை—யலது பிற [சத]

நீங்கா—கிய் சிறு னெறி புக வதி
திடமுட னிவெ முனாய்—தினமும் வெகு
பாங்கா—கிய பிரணவ நிலைவளர்
பரப்பிரமானந்தனைப்—பணி பலவும் [சத]

(19) இராகம் செஞ்சுருட்டி தாளம் ஆதி

கண்ணிகள்.

ஆநந்த மாநந்தமே — ஐயர்
அம்பல நாடக மாடுவது [ஆந]

தானந்த மறியாத — உயர்
சச்சிதாநந்த மெய்ச் சாக்ஷியன்றோ [ஆந]

சத்தினை யறிந்தாயே — அந்த
தாரணி முழுவதும் தாங்குகின்ற
சித்தென வுணர்ந்தாயோ — ஆநந்தச்
சித்துஞ் சத்து மொன்றாகச் சேர்ந்ததனால் [ஆந]

உலகிது வேறல்ல — ஜலம்
ஓங்கிய கானலில் உதிப்பது போல்
இலகிய நம்வடிவில் — உதித்
திருப்பதென் றறிஞர்க ளியம்புகின்றார் [ஆந]

பலபல வழிகளினால் — என்ன
பயனறிந்தா யொரு பாதையிலே
நல குரு வோதிய சொல் — லென்னு
ஞான ரகசியங் கொண்டே நடப்பாய் [ஆந]

அறிவது பிரதானம் — அதை
யறிய வைத்திடுங் கல்வி யவசியமே
பிறிவதும் வருவது மா — கிய
பிணி மரண ஜெனனப் பிழை தீர்க்கும் [ஆந]

புத்தகங் கல்வி என்றே — சிலர்
போதிக்கிறாரடம் சாதிக்கிறார்
பைத்திய மது போலே — இந்தப்
பாரினில் வேறில்லை பார்த்துக் கொள்வாய் [ஆந

கல்விக்கோ ரடையாளம் — அந்தக்
காலத்தில் வள்ளுவர் காட்டியுள்ளார்
செல்வத் திருக் குறளின் — ஒரு
சிறு குறளாலுண்மை தெளிந்திடலாம் [ஆந]

அழகதுவே கற்ற—தனால்
ஆயபய னென் கொல்வால றிவனற்றாள்
தொழா அரெனி னென்றார்—அந்தச்
சொற்படி கல்வி யேட்டுச் சுரைக்காயோ [ஆந]

கேளாய் தொட்டனைத் தூறு—மணற்
கேணி போல் மாந்தர்க்குக் கேடில்மதி
காளாய்க்கற்றனைத்தூறு—மென
கவின்றவை யறிந்தவர் நடுங்குவ ரோ [ஆந]

பார்வைத்த தொரு கல்வி—மனப்
பழக்க மென்றவ்வையன்று முழக்கியுள்ளார்
போர்வைக் குளிருக்கினற—அந்தப்
பொருளறியாருக் கெதுபுலனாகும் [ஆந]

ஆழமு நீளமுமாய்—வெகு
அகலமுமா யுன்னை யறத் தோண்டல்
வாழவுபாய முண்டு—மற்ற
வழிகளெல்லாங் கல்வி வழிகளல்ல [ஆந]

ஆழத்திலூற்றுத் தண்ணீர்—உள்ள
அளவுமுளவுஞ் சிறிதறிந்தாலே
ஊழற் றண்ணீரை முன்னால்—இறைத்
தூற்றிவிட்டல்ல வோபின்னூற்றெடுவார் ]ஆந]

அதுபோ லெண்ண மெல்லா—முத
லாவதொழிக்கும் வகை யாய்ந்திடுவாய்
நதிபோல் மதி யூற்று—நிலை
நடுவினிலகப்படு நலம் பெறவே ]ஆந]

இதுதானே கல்வி —இதை
எப்படியுந் தெரிந்திங்கிதமுடனே
பொதுவாய் நடந்திடிலோ—அருள்
புரியத்தெய்வங்கு ருவைப் போல்வரும் [ஆந]

அத்திருக் குருவ ருளால் — உன
ததிஷ்டம் தத்துவ மசியாய் விளங்கும்
ஒத்தகம்பிர மாஸ்மி—என
உறுதிவந்திடிலதே யறுதி கண்டாய் [ஆந]

அது தான் பிரக்ஞானம்—எனும்
ஆனந்தமய மான் மாப்பிரமம்
விதுவாய் விளங்கிடுமே—இது
வேதாந்தம் பரப்பிரமா நந்தமே [ஆந]

---

(20) இராகம் ஆரபி தாளம் ஆதி.

பல்லவி.

தத்வமசி, தத்வமசி—நீயே
சகலமு மெனி லெது புகலவுண்டறிவது [தத]

அநுபல்லவி.

சத்வகுண சகித சமரச யோக்யம்
சாம வேதத்துறுஞ் சாரதோக்கிய வாக்யம் [தத்]

சரணம்.

கல்லா லடியினிற் கடவுள்கைகாட்டு
கற்றறி யார் மனக்களஞ்சியப் பூட்டு
சொல்லாலு யர்நத சுத்தாநநத நாட்டுச்
சுகர் முதலோர் சுப சோபனப் பாட்டு [தத்]

விருப்பு வெறுப்பற்ற பொன் வெளி நிலை விளக்கும்
விரிந்திளகாமன வெறுங்கல்லை இளக்கும்
கருப்பை யெனுங் கொடிய கருமத்தைப் பிளக்கும்
காதலித்தவருள்ளக் கருத்தினை யளக்கும் [தத்]

நாலாம் பூமியில் நடப்பவர் பந்தம்
நடுங்கிட அகற்று மன்னூர்க்கொரு சொந்தம்
பாலா மனத்தவர் பால் மலர்க்கந்தம்
படிவது போலொளிர் பரப்பிரமா நந்தம் [தத்]

## (21) இராகம் நாதநாமக்கிரியை அடதாளம்.

### (ஆநந்தக்களிப்பு.)

**கண்ணிகள்.**

அகம்பிர மாஸ்மி நல் வாக்யம் - பர [அக]
மாநந்தநாட்டை யளித்தருள்பாக்யம்
சுகம் பெரிதாக்குஞ்சிலாக்யம்—பவத்
துன்பத்தை மாற்றத்துசங்கட்டும்யோக்யம் [அக]

இரண்டாவதாம் யசுர் வேதம்—தனில்
இலகுமனு பூதிக்கிசைந்தசு போதம்
முரண்ட பதங்கள் விரோதம்—கெட
மூலத்தினின்று முளைத்தெழு நாதம் [அக]

நானெங்குமாம் பொருளென்று—நல்ல
ஞானநு பூதி நலந்திகழொன்று
தானெங்குமேகாதுநின்று—சிவ
சாயுச்ய முத்தி தரும் பகை வென்று [அக]

எல்லா மறப்பையு நீக்கும் - நமக்
கென்றுந துணையாயிருந்துயிர்காக்கும்
நல்ல சுகமலர் பூக்கும்—தெய்வ
நாட்டமென்னுந் திட ஞான முண்டாக்கும் [அக]

நிர் விகற்பத்திலே தோன்றும்—உடல்
நீசவஞ்ஞான முதலிய மூன்றும்
சர்வமு மில்லாதெஞ் ஞான்றும்—திவ்ய
சத்துப் பரப்ரம்மா- நந்தத்தி லூன்றும் [அக]

---

## (22) இராகம் சுத்த பங்களா தாளம் ஆதி.

**பல்லவி.**

முனை மேவிய தீ—வினை வலியாலே
முயற்சி யற்றுபதி மூர்க்கரைப் போலே [முனை]

அநுபல்லவி.

மன மேவின வாய்—மறலி வருதிடில்
வழுத்த லென்னேது—விழுத்து ணையாது [முன]

சரணம்.

கெருனலுள னொருவ னின்றில்லை யென்னும்
பெருமை யுடைத் திவ்வுல கென்று வள்ளுவனர்
தரும நன்னெறியைத் தமிழ் மறையாலே
தநதுபகரித்ததைத்தா னறியாயோ [முன]

நித்தியா நித்திய வஸ்துவிவேகம்
நேரிக பரபல போகவி ராகம்
சத்துவ மிகுஞ்சமாதி விட்டிச்சை
சாதனமா மிநதச் சதுஷ்டய முறுவாய் [முன]

கூறிய சாதன மின்றிமென் மேலும்
கோடி கருமங்களைக் குறித்துச் செய்தாலும்
ஆறிய நிலைவாநதனுக்குமோ கோணை
அறுத்தருள் பரப்பிரமாநநதராணை [முன]

---

(23) இராகம் கமாஸ் தாளம் ரூபகம்.

பல்லவி.

கனவில் வாழ்கிறாய்—வெறுங்
கவலை சூழ்கிறாய்—வீணே [கன]

அநுபல்லவி.

கனவில் வீழ்கிறாய் ஒரு
கணத்தில் மாள்கிறாய்—உறு
கதியா—தென—மதியா—மலே
விதியை நோகிறாய் வீணே [கன[

சரணம்.

மனையு மகவும் பொரு ளுமுனது
வசமென்ற லைகிரு யையோ
தினையு மவைகள் சுகம தடைநது
செழிக்கவிடு மென்பது மெய்யோ
வினையினுல் வரும்—உடல்
விரும் பில் நோய் தரும்—அதை
விடுத்து—குரு - வடுத்து—நெறி
தொடுத்தி—டாமலே—வீணே [கன]

அரியனடி பேண மிகவும்
அறிவிலாம லஞ்சினுய்
காரியமதில் வீரியங் கெடக்
கலங்கி யயர்நது துஞ்சினுய்
கோரி யாவரும்—பழி
கூறவே வரும்—உயிர்க்
கொலையா—தியில்—நிலையா—கிவன
புலையர்—போல நீ - வீணே [கன]

தன கனக சம்பத்துன னுடனெ
தனித்து வருகுந தரத்த வோ
சனகச னநதனுதியர் தஞ்ச
மாதி யுனக்குப் புறத்தவோ
மனமே ஓடினுய்—என்ன
மகிழ்ச்சி தேடினுய்—உயர்
வரமா—பரப்பிரமா—நநத—பரமமே துணை—வீணே [கன]

---

24) இராகம் வசந்தா தாளம் ஆதி.

பல்லவி.

அடைக்கலம் புகுவோமே—நெஞ்சே அவன்
அருள் நல மிகுவோமே—ஆண்டவன்பால் [அடை]

அநுபல்லவி.

படைக்கல மெனுமைம்புலன்களைப் பகைத்து
பசி முதலாய் வரும் பலதுயர் சகித்துப்
பதறாமல்—மதி—சிதறாமல்—ஏம
பயங் கொடு கதறாமல் [அடை]

மார்க்கண்டற்காக மறலியை உதைத்த
மலரடி துணையென மதித்திங்குமெத்த
மயங்காது—மதி—தயங்காது—சிறு
மலங் களின் முயங்காது [அடை]

பாற்கடல் கடைந்த பக்குவம்போலே
பலபட வாய்ந்து பழுதத்தன் மேலே
பண்பின்பால்—வரு—நண்பன்—பால
உயர்—பரப்ரம்மா நந்தன்பால் [அடை]

---

(25) இராகம் தன்யாசி ஆதி தாளம்.

பல்லவி.

பிரமாநந்தம் பிரமாநந்தம்
பிரமாநந்தமே—பரப் [பிர]

அநுபல்லவி.

பரமாநந்த பராத்ம சுபாவம்
பரிபூரண கிருபாநந்த தீபம் [பிர]

சரணம்.

சத்திய மோன சதோதய சீலம்
சத்ஜனசங்க சகாய சுகோலம்
நித்திய நீதநி ரோத விசாலம்
நின் மலதத்துவ நிர்ணய மூலம் [பிர]

வேத புராதன வித்வ ஜனுதி
வேண்டும் விசாரணி தேசபிரி

ஏதமிலாம லிலங்கருட் சோதி
ஏக சு கா ச ன யோக சமாதி [பிர]

துரியாதீத சுவார ச சாந்தம்
சுப்பிர யோக சுவானுபவாபாநதம்
அரியாதியரறியாவுப சாநதம்
அழகிய பரிபூர ணாநத காநதம் [பிர]

---

'6) இராகம் சங்கரா பரணம் தாளம் ரூபகம்.

பல்லவி.

தருணமிது வநதருளுவாய்
தமியேனினிச் சிறிதுநதரியேன் [தரு]

அநுபல்லவி.

கருணை நிதியுனை யல்லாது
கடவுளாரிப புடவிமீது [தரு]

சரணம்.

சரண முனது திருவடி
தள்ளாதே யென்றனை மறுபடி
கரணாவத்தை கழித்துக் காட்புக்
கவலை யோட்டிக்களிப் பை பூட்புத [தரு]

என்னை யெனக்குக் காட்டுவாய்
இன்ப நிலை யிருத்தி யருத்தி
பின்னே யெனிற் பெருகும் தீயே
பிரமா நநதப் பிரபு நீயே [தரு]

'7) இராகம் செஞ்சுருட்டி தாளம் ரூபகம்.

(காவடிச்சிநது வர்ண மெட்டு.)

கண்ணிகள்.

ஆசை வெட்கமோ அறியாது
ஆதலினா னான் காதலி னாலென்

அச்சகாண மற்றதிப் போது
என—தருகிலுள சிலர் வருகுமவர் பலர்
மிருகமெனவுரைதரவு கிணகிலர்
ஆதரித்தாள் வாது செய் யாது
அன்னை தகதை நீ யாசான் தெய்வமெல
லா முனை யல்லாம லிங்கேது [ஆசை]

கொஞ்ச கஞ்ச மல்ல வுன்பேரில்
கொண்ட வென்னசை—பெண்டிரில் வேசை
கூட ஒது வாளோமுன் னேரில்—கல
கூடல் புரியுமு னூடல புரிவது
கேடலலவோ உனைத்—தேடல் செயுமிது
கூடுமோ இப்பாடுமே தீரில்
கும்பிடவோடு—தெம்புடன் கூடிக்
கொஞ்சு வேனே மிஞ்சி யிப்பாரில [ஆசை]

பித்தி யென்று பேசுகின்றாரே
பித்தனே உன்றன்—பத்தினி யென் றன்
பேரும் வகது நேர்கதது பாரே—சிறு
பேதை மதியினி—லோதியதை வெகு
மேதை மொழியிது—வேதகுதி யெனப்
பேணி யணிகதா யன்று நேரே
பிழை பொறுக்கும்—ப்ரமா நகத ச
பேச நீதா வாச மென்றாரே [ஆசை]

---

(28) இராகம் செஞ்சுருட்டி தாளம் ரூபகம்.

(காவடிச்சிகது வர்ன மெட்டு-)

கண்ணிகள்.

ஒரு—காலத்திலுருகும் கல்லுமே—இகதக்
கல் நெஞ்சருகாது வெல்லுமே—என்ன
காரணம் நீர்கண்டு சொல்லுமே—உயர்

கருணாநிதி, தருணாதா, வருணபுக, மூருஞ்சல
காலன்வரினுயிர் செல்லுமே—செய்நீர்
கால மெல்லாந் தில்லு முல்லுமே.

ஆலத்தை யுண்டோர் நீரல்லவா—உம்மை
யல்லாமல் வேறேதும் மெல்லவா—தெரி
யாதோ உமக்கின்று சொல்லவா—வினை
யாட்டுக்குறி, காட்டிப்பய, மூட்டித்
தொழில் கூட்டிப் பழி
யாக்குகின்றீர் வெறும்—புல்லவா—வினுக்
காளாக்குவ தேதாநும் நல்லவா.

நம்பினே பேரை நட்டாற்றிலே—விடல்
ஞாயந்தானோ மனதூற்றிலே—வரும்
நன்னீர் போலக் கண்ணீரூற்றிலே—னென
நாளுநதுயர் நீளும்படி
பாழும்பழ வூழுந தொட
நாட்டுகின் றீராசைக் காற்றிலே—சுற்றி
நானுழன்றேன் கர்மச் சேற்றிலே.

எம்பிரானும்பேரி னெண்ணமே—துன்றி
இல்லைவேறீங்கிது திண்ணமே—உம்மை
இன்புற்றறிநதேன்கைக்கிண்ணமே—என
ஏதந தவிட யாதுநதொட
ராதன்புட னேதந திடு
மென்பொருட்டா யிநத வண்ணமே
அரு—ளம்பிரமாநந்த வண்ணமே [ஒருகாலத்தில்]

---

9) இராகம் செஞ்சுருட்டி தாளம் ஆதி.

கண்ணிகள்.

இந்தா இந்தா வென்றருள்
தந்தா ளிங் நேர மே
எந்தாயது நின் பாரமே—ஆதாரமே
ஏதுமிலேன் பண்டாரமே—கதி

என்னளவு—மில்லை யினி—உள்ளபடி
சொல்லுகிறேன். [இங்]

சந்தேகந் தேகமென வந்தாசை மூட்டுதே
சந்தோஷமின்றி வாட்டுதே பொய்யிட்டுதே
சற்ஜனரைவிட் டோட்டுதே—அதி
சஞ்சலமே—மிஞ்சவதா—லஞ்சியுன்
முன்—கெஞ்சுகிறேன் [இங]

அஞ்ஞானக் காரிருளில்—மெய்ஞ்ஞானமின்றியே
அல்லல் கொண்டேனிங் கொன்றியே செய்நன்றியே
அடியேன் மறந்து குன்றியே—பிழை
யாற்றுவனே—போற்றி ஜய—போற்றி
யென—ஏற்றுவனுன் [இங]

இஞ்ஞாலந் தோற்றுவிக்கும் விஞ்ஞான வானமே
ஈடிங்கிலாத ஞானமே சமானமே
எங்கும்ப்ரகாச மோனமே—அறி
யேனெந்தவா—றானந்தவிர்—வேனந
தபிர்—மானந்தரே [இங]

---

## (30) இராகம் இந்துஸ்தான் தோடி தாளம் ஏகம்.

பல்லவி.

பார்த்துக் கொண்டேனே—வினை
தீர்த்துக் கொண்டேனே—கண்ணால் [பார்]

அநுபல்லவி.

மூர்த்தி தலந்தீர்த்தம் முறையாய்த் தொடங்கி நல்ல
வார்த்தை யொன்று சற்குரு வாயைத்திறந்து சொல்லப் [பார்]

காலடியில் வெள்ளெறும்பு காணும்படி திரிந்து
ஆலடியில் நாதனை யென்னையனை நானே தெரிந்து [பார்]

நிழலருமை வெய்யிலிலே நின்றறியினென்று முன்னே
கிழவியு ரைத்தது போல் கேட்டை யடைந்து பின்னே [பார்]

என்னைப்போல் பாவியர்க ளெங்கேயுங்கண்ட தில்லை
பொன்னைக் காணு நகைபூண்டேன் பொருளினெல்லை [பார்]

எத்தனையோகோடி ஜென்மம் இழைத்த பெரும் பாக்கியத்தால்
சுத்தாத்ம தத்துவமாஞ் சோதியை ஓர்வாக்கியத்தால் [பார்]

என்னுள்ளிருந்த தமிழ்தா—யினித்துக் கடிந்திருளை
இன்னேய கற்றவந்த இன்பப்பெரும் பொருளைப் [பார்]

தேவாதி தேவரெல்லாம்—தேடித் திரிந்தலையக்
காவாயென்றோது முன்னே கால்காட்ட மேனிலையைப் [பார்]

அரிபிரமர் தேடியறியாத திருப்பதத்தை
விரிபிரமை மாற்றுகின்ற வேதாந்தரகசியத்தைப் [பார்]

பாழாகி மாள்வதற்கே பாடுபட்ட நாய்க்குமெல்ல
ஊழாதி மாற்றியருளூட்டி யொருவார்த்தை சொல்லப் [பார்]

வேதாதியால் விளங்கா விஞ்ஞானச் செந்திருவைப்
பேதாதி தீர்த்தருளும் பிரமானந்தக் குருவைப் [பார்]

---

(31) இராகம் கல்யாணி தாளம் ஆதி.

பல்லவி.

ஆறுதல் தருவாய்
ஐயா நானோ ரநாதி யேழை [ஆறு]

அநுபல்லவி.

மாறுதலில்லா மகின்று
வாழவென்று—சூழ நின்று [ஆறு]

சரணம்.

மரங்க ளேறுங் குரங்கு போன்ற
மனதை யடக்கும் வலிமை சான்ற
வரங்களீந்து வாளி லூன்ற
மாயை மாண்டு நீயே தோன்ற [ஆறு]

ஒன்றிரண்டிங் கன்று நானே
உளத்தில் விளைக்கும் பழக்கந்தானே
கன்றி நின்று கதறினேனே
காலமோ சுசில வானே [ஆற]

தஞ்ச முன்னை யன்றி யேது
தனையனுக்கித் தரணி மீது
அஞ்சலிசெய் தேனே சாது
வாம்பரமா நந்தாவிப் போது [ஆற]

---

(32) இராகம் குறிஞ்சி தாளம் ஆதி.

(திருப்புகழ் வர்ன மெட்டு.)

சந்தக்குறிப்பு.

தான தந்தன தானு தனுதன
தான தந்தன தானு தனுதன
தான தந்தன தானு தனுதன தன தானு

தாமதந்தனிலே மூழ்கி ராஜச
சாதனங்களை யேதேடி மானுட
சாதியின் குணமாயாது மாயல வனிமீது

சாரமின்றிய பூமாதர் சேய்பறி
யாசை கொண்டுழல் நாயேனி னுதடி
சார விங்கொரு நாளேனு மோர்கில னுறவாகி

வீம மென் றொரு பேராகு மாவர
ணுசலந் தனிலே வீழு வேனையி
வேனை வந்திரு காலானு மோதிந னுபதேச

வேத தந்திர போதானு கூலவி
னோத சம்பிரம நீதா னிதேததி
வேறு கொண்டினி யேகாம லேயினி தநுள்வாயே

சோம சுந்தர தேவா சனுதன
மூல மந்திர கீதா சதா சிவ
சோதி யம்பல வாணுக்ரு பாகர நவநீத

சோர விண்டயனுர் தேடி யோடிமு
ளைறிந்திட லாகாத தாண்முடி
தோயுமங்கள ரூபா சார சார முழுதாக

நாமமும்பல ஆகார வேடமு
மோகமுந்தரு மாமாயை போல்வரு
நாதகங்கை மணளா தாரசென வுறுநீதி

ஞாயதுங்க சுகாதார தீரனி
ராககங்கண வீர தயாளனி
ராமலிங்க சொரூபா விராவிய பெருமானே

---

(33) இராகம் கேதாரகௌளம் தாளம் ரூபகம்.

பல்லவி.

நீயேன் பவக்கடலில் வீழ்கிறாய்
நெஞ்சே ஆயாது [நீயேன்]

அநுபல்லவி.

நோயை யறியாக நாடி
நுழைந்து தேடி—விழைந்து கூடி [நீயேன்]

சரணம்.

என்னை விட்டு நீ எங்கு போயும்
இல்லையே சுகம் இருந்தாராயும்
தன்னையுற்றறியாது பாயும்
தன்மையினுள்ள நன்மையுந் தேயும் [நீயேன்]

நீயும் நானும்வேறல்ல வென்று
நிச்சயமாக நினைப்பா யின்று
தாயுந் தந்தையுமாகநின்று
தாங்கையிலகன்று நீங்கியங்கே சென்று [நீயேன்]

உனக்கு மெனக்கும் பொருத்தந்தானே
உண்டறியாம லுழல்வ தேனே
தனக்கு நேரில்லாத் தனியனானே
தாவிக்குதித்தயல் மேவும் பெண்மானே [நீயேன்]

பாரில்மிருகம் பறவை போலே
பதியென்று பெற்றபாலர் பாலே
நேரிலாசை நிறுத்தி மேலே
நிலையை மறந்து கலவி யாலே [நீயேன்]

பலவிதமெனுங் குழந்தைகள் பெறப்
பண்டென்னுடனே பழகி நன்குறப்
புலவிகொண்டு நற்புகழெலாந் தெறப்
புரியுந்தொந்தரை சரிய ஈறன் பற [நீயேன்]

சின்னஞ் சிறுவருடனே யாடச்
சிரமம் பலவுஞ் செறிந்து நாட
முன்னம் புரிந்த முறைகளோட
மூர்க்கம் விட்டுக்கூட*—மார்க்கந்தொட்டுக் கூட [நீயேன்]

நாமரூபத்தி னின்று மீட்சி
நாடினால் வருநல்ல ஆட்சி
ராமலிங்க சொரூப சாட்சி
நம்பரிபூர ணாநந்தனத் தாட்சி [நீயேன்]

---

*கூடம்—ரகசியம்.

(34) இராகம் நாதநாமக்கிரியை தாளம் ஆதி.

பல்லவி.

சாரமே தேனு முண் டோ—சம்
சாரத்திலே கருதும்—கோரத்திலே சிறிதும் [சார]

அநுபல்லவி.

பாரமேயன்றிப்—படர் சுகமேது
பார்த்திருந்து மிப்படிப்—பதறலாகாது
நேரமே யில்லையென்று—நினைப்பது தீது
நெஞ்சே ஐயன்மலர்த்தாள் நேசியிப்போது [சார]

இந்திர ஜாலமொன்று மிந்தவுலகு
இருப்பில்லை தோற்றமென் றெண்ணி நீவிலகு
தந்திரசாலியாய்த் தரைதனி லிலகு
தவிப்பதில் பயனில்லை சத்வமிங்குலகு [சார.

ஐம்புலன் வழியே அறவும் செல்லாதே
உலகத்தி லெவ்வுயிரு மழியக்கொல்லாதே
வம்பியலாகிய வார்த்தை சொல்லாதே
மனமே நீ செல்லுகின்ற மார்க்கம் பொல்லாதே [சார]

விருப்பு வெறுப்புகள் வீணினி விடுவாய்
விரைந்துமெய்கூடி விசாரஞ் செய்திடுவாய்
நெருப்பெனு மறிவினில் நின்பவம் சுடுவாய்
நீதியிதை மறந்தால் நிச்சயம் கெடுவாய் [சார]

இராமலிங் குனக்கெனச் சாம்வரை யுழைப்பாய்
சதமென்றுன் மதியைப் பொய்ச்சார்பிலே நுழைப்பாய்
இராமலிங்கேசனருளின்றியோ பிழைப்பாய்
எம்பரி பூரணாநந்—தம்பெற அழைப்பாய் [சார]

---

## (35) இராகம் செஞ்சுருட்டி அடதாளம்.

கண்ணிகள்.

ஆதியான ஜெக—ஜோதி மாதவ சொ
    ரூபனே—பிர—தாபனே—காரு—ணியனே—சுப
சேதி யாகமெனர்—நீதியே ஆரிய
    பூபனே—சுக—லாபனே
ஐயனே மனது—நைய நீகைவிட
    லாகுமா—நல—பாகுமா—மொழி—வாகுமா—மகிழ்
மெய்யனே மழுமான் கையனே யருளில்
    சோகுமா—பழி—போகுமா
ஆண்டவா அரவம்—பூண்டவா வருவை
    ஆளவே—வினை—தாழவே - நலம்—நீளவே தில்லைத்

தாண்டவா பணிந்தோ—மாண்டவாவிலகி
வி ழவே—அருள்—சூழவே

பண்டைத் தெய்வநிலை—கொண்டிப்பொழுது கண்
பாரையா—அது—சீரையா—அளி—கூரையா—வரு

தொண்டர்க் குறுதுயர்—தெண்டிப் போனேகலி
தீரையா—துணை—யாரையா

காரண கருது—நாரணதியர்கள்
கர்த்தனே—பிர—சித்தனே—பர—முத்தனே—பரி

பூரணநந்தன் சொல்—தாரண பெரிய
புத்தனே—பரி—சுத்தனே.

---

(36) இராகம் பிலஹரி தாளம் ஆதி.

பல்லவி.

ஆதரித்தாளுமையா—அடிமையர் முன்
அனுகிசித்ததிதானே—நுணுகும் வித்தகவானே [ஆத]

அநுபல்லவி.

பூதலத்திலுனது பொன்னடி வணங்கிப்
புகழுமெங்களுக் கருள் புரிநதிட விணங்கி [ஆத]

சரணம்.

காதலித்தோர்க்குக் கதியுத வுநதுங்கக்
கடவுள் வேறெங்குண்டு—கருணை துலங்க
ஈதலற்ற விரும்பை யிலகிய தங்க
மெனச்செயுங் குருவே இருளு மழுங்க [ஆத]

புள்ளி மயிலின்மிசை வள்ளி தெய்வானைமாது
போந்துடன் மருவிடப் புகழ் சிறிதுந் தப்பாது
வெள்ளிய நீறணிந்து மெலிந்த பாவியர் தீது
விலக வந்துநீயதிவேகமதா யிப்போது [ஆத]

திரிபுரதகனனார்—தேசொளியினில் வந்த
தெய்வமுனை மறந்தோர் சேருவர் பவ முந்த
பரிவு நிறைந்தருள் கூர்பரி பூரணானந்த
பாவலன் பாசுரம் பாடினேன் மெய்பொருந்த [ஆத]

---

(37) இராகம் தோடி தாளம் ரூபகம்.

கண்ணிகள்.

ஆதியாகிய—ஜோதியே யெனை
யாளுமே—எந்த—நாளுமே

பாதியாகிய—மாதிட மொளிர்
பண்பனே—அன்பர்—நண்பனே

நீதி யாதுநா—னோதி டாத வோர்
நீசனே—னுமுன்—னேசமே

போதியா—யுயிர்—மேதியார் கொடு
போகுமுன்—பரி—வாகவே

ஐயனே—உயர் மெய்யனே தவம்
ஆண்டிலே—னெறி—கண்டிலேன்

பொய்யனே—னினி—யுய்யுமாறது
போதநா—தனி—னோதனே

துய்யனே—மழுக் – கையனே எனைச்
சோதியேல்—மிக—வாதியேல்

செய்யனே—திகழ்—வையமே புகழ்
சிற்பராநந்த—தற்பரா

ஆரணா—நல—வாரணா வத
மாதிமா—தரை—மீது வாழ்

காரணா—தரா—தாரணா சிவ
காமி—மேவுசு—வாமி நீ

காரணாதியர்—வேறெணுதடி
நாடவோங் - கும்மி—சேடனே

சாரண—பரி—பூரணாநந்த
சாகித்ய—பத—சாரனே.

---

(38) இராகம் தோடி தாளம் ரூபகம்.

பல்லவி.

அப்பணிசடை யமல நாதனே—ஹர ஓம் திரிபுர
அழ லெழ நகைத்தருளும் போதனே [அப்]

அநுபல்லவி.

ஒப்பணியிலிங் குரைக்க முன்னே
ஒருவருமிலை யுயர்ந்த பொன்னே.
எப்பணியு மிலாம லுன்னை
இறைஞ்ச வரந்தந்தி டுவாயின்னே [அப்]

சரணம்.

ஆனையா மகங்—காயங் கொன்றுதோ
லணிந்தனை நீயே
ஆதிமூலமென்—றனழைத்த போதனை
யாளவ—ந்தாயே
மானை மழுவை மனது புத்தி
வடிவ மெனக்கை வைத்த சித்தி
யானை அணைத்து மான சத்தி
அருளே தருவா யரிய முத்தி [அப்]

மனமெனும் பெரு—மந்தரகிரி
மத்தை யூன்றியே
வலிக்கும் புத்திவா—சுகியைக் கயிறு
வைத்துத் தோன்றியே
தனமலி யிருதய மெனுங்கடல்
தனைக் கடையவத்தி யெழுந்திடல்

மனும் விடமதை மறைத்துண்டங் கடல்
மகிமை தெரித்த மதியே பாம் புடல் [அப்]

வாசமில் கொன்றை—யெருக்குத் தும்பைப்பூ
மாலையால் வழி காட்டுவாய்
மதிக்கும் பெரியார்—மனக்கல் ஞான
வைர மாக நாட்டுவாய்
நேசமிகுந்து நிறுத்தும் வான
நிலையை யளிக்கும் நிமல மோன
தாசனின் பரி பூரணாநந
தனுக் கருணஞ் சன மார்க்கமான [அப்]

---

(39) இராகம் கமாஸ் தாளம் ரூபகம்.

பல்லவி.

கவலை தீரையா—திருக்
கடைக்கண் பாரையா—பாழுங் [கவ]

அநுபல்லவி.

அவல வாழ்வினை—மறந—கமலவாழ்வினை—அவாடந—
திடவும்|இடர்—கெடவும—சுசப்படவுமே குகா பாழுங் [கவ]

சரணம்.

பன்னிரு புய—மேவிய சிவ
பால ஞான பண்டிதா
பற்றுஞ்சூர—பத்மகால
பரமனே அகண்டிதா
பொன்னிருபத மலர்—பூசித்தேனிதம்—ஒளிர்
பூரண—திரி—காரண—பரி—பூரணாநந்தா—பாழுங் [கவ]

## (40) இராகம் இந்துஸ்தான் தோடி தாளம் ஆதி.

கண்ணிகள்.

காத்தருள் செய்—கார்த்தி கேயா
 காருண்ய சீலா—கழல் பணிந்தேன்
பூர்த்திமேவு மூர்த்தி யாம்பு
 ராந்தகன் பாலா—புதல்வனெனைக் [காத்]

மானதெய்வ—யானை வள்ளி
 மாமணவாளா—மறை புகழும்
ஞானபந்த மோனகந்த
 நாண் மலர்த்தாளா—நம்பினேனெனைக் [காத்]

பார வினை—தீரவரும்
 பண்டைப் பொருளே—பரிவுடனே
சார பரி—பூரணாநந்
 தத்தை யருளே—தருணமிது [காத்]

## (41) இராகம் அம்ருதவாஹினி தாளம் ஆதி.

பல்லவி.

ஆதாரமே தினி—ஐயா இம்மே தினி
 ஆக்கிய வரதனே [ஆதா]

அநுபல்லவி.

சீதா சமேதா—திவ்ய பொற் பாதா
சீதாரா சுகாதாராஜி தேந்த்ரிய வசிகரா [ஆதா]

சரணம்.

ஆன்ம தரிசன—மாமுப காரமே
அது புரிவாய் நீ—யருளினிக் நேரமே
பான்மை மருத—பக்குவ போத
பந்த பரி பூரண நந்த பத தாரண [ஆதா]

(42) இராகம் காபி தாளம் ஆதி.

கண்ணிகள்.

ஆனந்தம், ஆனந்தம், ஆனந்தம் ஆனந்தம்
ஆனந்தமே—பர—மானந்தமே
பரமானந்தமே—பரமானந்தமே [ஆன]

ஆதியனாதியு—மாகியொளிர் தரும்
ஆனந்தமே—பர—மானந்தமே [ஆன]

சோதி சொரூப சு—பாவ சுகாமிர்தம்
ஆனந்தமே—பர—மானந்தமே [ஆன]

ஆக்கியளித்துப் பின்னழிக்கும் மூர்த்திகள்
ஆனந்தமே—பர—மானந்தமே [ஆன]

தூக்கிய பாதத்தாற்—றொந்தோமென்றுவ
தானந்தமே—பர மானந்தமே [ஆன]

ஞானவெளியதனி—னு—க மாடுவ
தானந்தமே—பர—மா நந்தமே [ஆன]

மோன சிவகங்கையாய்—முடிமிசை பாடுகுவ
தானந்தமே—பர—மா நந்தமே [ஆன]

திரிபுரமெரித்தநந்—சிவனென மிளிர்குவ
தானந்தமே—பர—மானந்தமே [ஆன]

பரி பூரணாநந்த பாக்ய சொரூப மெய்
யானந்தமே—பர—மா நந்தமே [ஆன]

(43) லாவணிவர்ன மெட்டு.

கண்ணிகள்.

அண்ட முழுதும் முண்ட ஆனந்தமே
அகி—லாண்ட நாயகி எங்கள் ஆனந்தமே
ஜெக—தாம்பிகையான மாயை ஆனந்தமே
தொண்டருளத்தில் வாழும் ஆனந்தமே

நல்ல—சோபன ரஞ்சித மெய் ஆநந்தமே
ஒளிர்—சோதியதாக நின்ற ஆநந்தமே
அருள்வடி வாக வந்த ஆநந்தமே
சிவ—ஞானருடல் பாதியுண்ட ஆநந்தமே
எாந்த—ஆபத்தும் நீக்குகின்ற ஆநந்தமே
பரி பூரணானந்தப்பொன் ஞாநந்தமே
திருப—பாற்கட லிடைவாந்த ஆநந்தமே
தக்க—பக்குவத்தில விளங்கும் ஆநந்தமே [அண்]

## (44) இராகம் முகாரி தாளம் ஆதி.

பல்லவி.

ஜோதி சொரூப சுவாமி நமோ

அநுபல்லவி.

சுவாமி நமோ—அநந்தர்—யாமி நமோ [ஜோதி]

சரணம்.

ஆதியநாதி—யாகிய தேவா
சாதியிலாத சர்தசுபாவ [ஜோதி]

வந்த ருள்வாயே—மாபெருநதாயே
செநதமல போலொளிர் சிவ மணி நீயே [ஜோதி]

அரிபாநதாம—ஞதியர் வேஷ
பரிபூரணாநந்த—பரம சநதோஷ [ஜோதி]

## (45) இராகம் இங்கிலீஷ் நோட் வர்னமெட்டு.

பல்லவி.

வாழி வாழி போடாதே நல்
வார்த்தை யொன்று கேள்—நெஞ்—சே சரி [வாழி]

அநுபல்லவி

பாழி லழிந்து நீ—யூழி தொறும்பவ
மேழிலு மலைந்து—பார்த்—தா—யே இனி [வாழி]

சரணம்.

ஓடி ஓடி நீ கண்ட தென்
ஓதுவா யென் முன்—னா—லே—ஒரு
கோடி நினை வொடு கூடி வெருதுயர்
தேடியழிகிறாய் தன்—னா—லே இனி [வாழி]
சொன்னது கேட்டாற் நிலையில்
தூங்காத் தூக்கந—தூங்—கு—வாய்—நல
கன்னி கணவனை மன்னு முறையென
உன்னறி வுடனே ஓங்—கு—வாய் இனி [வாழி]
சார பரி பூரணாநந் தன் சொன் மாலை சாற்றுவாய்—பல
சோர வழிவிகார முழுவதுமாநந்த வினைவினில்
மாற்றுவாய் இனி [வாழி]

---

(46) இராகம் எதுகுல காம்போதி தாளம் ரூபகம்.

கண்ணிகள்.

அறிவே ஆநந்தம் அதை யறியாதா ரனாநதம்
பிறிவே பேதமையா மது பிறவியெனும் பந்தம்
செறிவே தன்னிலை நீ மறு செயல் புரிந்தாவதென்ன
குறிவேறற்றி ராம லிங்க குருவடி கலமனமே
அருளாலவன் பதும மல ரடி தொழுதினையாம
லிருளா லொளி யிழந்து பல இடர்க்கடலினில் விழுந்தாய்
உருளாதழ லாது புவி யூடு நீ வாழ வென்றால்
பொருளாம் ராமலிங்க குரு பொன்னடி சேர்மனமே
பிரமாநந்த குரு வருள் பெறும் வழியடையாது
தாமா ரெனக்கென நீ மிகத் தருக்கி யிங்கழிகின்றாய்
பரிபூர் ணாநந்தன் புகல் பதங்களின் புடன்பாடி
அருவாகிய பொருள் மேன் மதி யரும்பிட இனிவாழ்வாய்
[அறிவே]

## 47) இங்கிலீஷ் நோட் வர்னமெட்டு.

### கண்ணிகள்.

சச்சிதானந்த சுபாவ சத்துவ நன் னேசமே
அச்சுதவனந்த மோன அத்வைத விலாசமே
பச்சுணப்ர கிருதியாய் முளைத்த ஆதிபோதமே
மிக்க வைரூ பூதமாய் விரிந்த போத நாதமே
மாயையிற்ப்ர திபிம்பித்து மன்னு மாத்ம ஜோதியே
பேயவித்தை தனனிற் றோன்றும் பேதமாமனதியே
சூக்கும சரீரமாகித் தோற்றிடு மெய்ஞ்ஞானமே
தீர்க்கதூல மாய்விளங்குந திவ்ய சந்திதானமே
அச்சமின்றி யிச்சகத்திலாரும் வாழ ஆக்குவீர்
துற்சன முறவில் வந்ததுன்பம் யாவும்
சர்வபரி பூரணாநந்தப்ரகாச சாந்தமே
செர்வமற்ற டைந்திடிற் கிடைக்குமிங்கே காந்தமே [சச்

மங்களம்

முற்றிற்று.

